26th April 1960]

SRI K. VINAYAKAM : திராவிட நாடு பாலிடெக்னிக் என்ற பெயரை வைத்தால் மற்ற ராஜ்யங்களிலிருந்து வரக்கூடிய மாணவர்கள் இங்கு சேர்ந்து படிக்க வசதி இல்லாமல் போய்விடும் என்றும், தமிழ் நாடு பாலிடெக்னிக் என்ற பெயரை வைத்தால் பக்கத்திலுள்ள ராஜ்ய மாணவர்கள் வந்து சேர்ந்து படிக்க வசதி ஏற்படும் என்ற சூழ் நிலையில் அரசாங்கம் அதன் பெயரை மாற்றி வைத்திருக்கிறார்களா என்பதை அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI C. SUBRAMANIAM: ஒரு ஆராய்ச்சிக் குழு நியமித்து அதை எப்படி மாற்றுவது என்பதைப்பற்றி யோசிக்கப்படும்.

*Polytechnic for Girls*

* 822 *Q.*—SRI A. VEDARATHNAM : கனம் நிதி அமைச்சர் அவர்கள் தயவு செய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்கு பதிலளிப்பாரா—

(அ) இம்மாநிலத்தில் பெண்களுக்கென பாலிடெக்னிக் ஏற்படுத்தும் உத்தேசம் சர்க்காருக்கு உண்டா ?

(ஆ) அப்படியானால், அதன் விபரமென்ன ?

THE HON. SRI C. SUBRAMANIAM: (*a*) No, Sir.

(*b*) Does not arise.

SRI A. VEDARATHNAM : பெண்களுக்கு தொழில் கல்வி பயிற்சி அவசியம் இல்லை என்று அரசாங்கம் கருதுகிறதா ? இப்பொழு துள்ள தொழில் பயிற்சி பள்ளிகளில் பெண்கள் சேர்ந்து படிக்க வசதி செய்து கொடுக்கப்படுமா ?

THE HON. SRI C. SUBRAMANIAM: பெண்களுக்கு தொழில் கல்வி பயிற்சி அவசியம்தான். அதனால் பாலிடெக்னிக்கில்தான் சேர்ந்து படிக்கவேண்டும் என்பது இல்லை. எந்த பாலிடெக்னிகில் வேண்டுமானாலும் அவர்கள் சேரலாம். இப்பொழுது அவர்களுக்குத் தான் சகல உரிமைகளும் கொடுக்கப்பட்டிருக்கிறதே. அதனால் அவர்கள் எதில் வேண்டுமானாலும் சேரலாம். பாலிடெக்னிக்கில் ஒருவரும் இது வரையிலும் வந்து சேரவில்லை.

*Government publications*

* 823 Q.—SRI M. P. SARATHI : கனம் நிதி அமைச்சர் அவர்கள் தயவு செய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்கு பதிலளிப்பாரா—

(அ) இந்த அரசாங்கமே நடத்தும் மாத இதழ்கள், மாதமிருமுறை இதழ்கள், வார இதழ்கள் எவை எவை ?

(ஆ) சுமார் எவ்வளவு பிரதிகள் ?

(இ) அவைகளை வெளியிட ஆகும் செலவு என்ன ?

(ஈ) சந்தாவாக கிடைக்கும் தொகை எவ்வளவு ?

THE HON. SRI C. SUBRAMANIAM : (*a*) *to* (*d*) The particulars are not readily available. A statement will be placed on the table of the House as soon as the particulars are gathered.

SRI A. V. P. ASAITHAMBI : அரசாங்கம் ஒவ்வொரு இலாகா செய்திகளை வெளியிடுவதில் பலவிதமான பத்திரிகைகள் செய்தி தாள்கள் மூலமாக வெளியிடப்படுகிறது. அப்படி வெளியிடுவதைவிட மாதம் ஒன்று அல்லது மாதம் இரு முறை என்கிற மாதிரி ஒரு இதழை அது அதிகப்படியான விலை வைத்தாலும் சரி, வெளியிட்டு அதில் எல்லா இலாகாவின் செய்திகளையும் வெளியிடுவதற்கு அரசாங்கம் முயற்சி எடுக்குமா ? அப்படிச் செய்வதால் செலவு குறைவாக இருக்கும் அல்லவா? அதைப்பற்றி அரசாங்கம் கவனிக்குமா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : கனம் அங்கத்தினர் அவர்களே பிரிதிகளை அதிக விலைக்கு விற்க வேண்டும் என்று சொல்லு கிறார். சிலருக்கு சில விஷயங்களில்தான் அக்கறை இருக்கும். அப்படி